வெளுக்கும். இங்கும் வகுளபூஷண பாஸ்கரோதய மாதலாலும், அதுதானும் கலியுகத்தின் உதயகாலத்திலாதலாலும் கிழக்கு வெளுத்ததாகச் சொல்லிற்று. கீழ்வானமென்றபோதே மேல்வானம் நினைவுக்கு வரும். நித்தியவிபூதி மேல் வானமாகும். லீலாவிபூதியானது நம்மாழ்வாருடைய திருவாய்மொழி யவதாரத்தாலே "ஓராயிரத்துளிப்பத்து உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகும் தம்மூரெல்லாம்" "வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே" இத்யாதிப்படியே தானே பரமபதமாயிற்று. ஆகவே கீழ்வானமான இவ்விபூதி வெள்ளென்றது. [எருமை சிறுவீடு மேய்வான்] வீடு என்று மோக்ஷம்; சிறு வீடு என்று கைவல்ய மோக்ஷம். இந்த ஸங்கேதமிட்டருளினவர் நம்மாழ்வார்; திருவாய்மொழியில் (4—1—10) "குறுக மிகவுணர்வத்தொடு நோக்கி" என்ற பாசுரத்தின் பொருள்கொண்டு இஃது அறியத்தக்கது. எருமையென்பது தாமஸப்ரக்ருதிகளை. நம்மாழ்வார் திருவவதாரம் செய்தருள்வதற்கு முன்னே பலரும் தாமஸப்ரக்ருதிகளாய் நல்வீடு செல்லாது சிறுவீடு முதலியவற்றிற் சென்று பாழாயினர் என்பது இங்கு ஸூசிதம். [மிக்குள்ள பிள்ளைகளுமித்யாதி.] மற்றைப் பிள்ளைகளையும் போகவொட்டாமல் தடுத்து இப்பிள்ளை வாசலில் வந்து துவள்வதனால் இவருக்குண்டான விலக்ஷணமான ஏற்றம் தோற்றுவதுபோல, மற்றையாழ்வார்களிற் காட்டில் நம்மாழ்வார்க்குண்டான ப்ரபந்நஜந கூடஸ்தத்வமாகிற ஏற்றம் தோற்றுவிக்கப் பட்டது. "போவான் போகின்றாரை" என்ற பிரயோகம் வெகு ஆச்சரியமானது. 'போவதற்காகப் போகிறவர்கள்' என்று சொல்லுவதுண்டோ? இல்லை. அப்படியிருக்க ஏன் சொல்லிற்று? போவதுதானே ஸ்வயம் ப்ரயோஜனமென்று காட்டுவதற்காகவே சொல்லிற்று. இத்தகைய பிரயோகம் முதன் முதலாக நம்மாழ்வார் திருவாக்கில்தான் வந்தது; திருவிருத்தத்தில் "போவான் வழிக்கொண்ட மேகங்களே!" என்றார். [உன்னைக் கூவுவான் வந்துநின்றோம்.] 'கூவிக்கொள்ளும் காலமின்னங் குறுகாதோ' "என்னைக் கூவியருளாய் கண்ணனே" "கூவிக்கொள்ளாய் வந்தந்தோ" என்று பலகாலும் விரும்பினபடியே கூவுவான் வந்து நின்றோமென்கிறாள். [மாவாய் பிளந்த தேவாதிதேவனை] இப்போது ஆண்டாள் நோற்பதுபோல நம்மாழ்வாரும் ஒரு திருவாய்மொழியில் நோன்பு நோற்றார்; வீற்றிருந்தேழுலகும் என்ற திருவாய்மொழியில் "ஏற்ற நோற்றேற்கு" என்று முதலிலும் "வண்டமிழ்நூற்க நோற்றேன்" என்று முடிவிலும் வருவது காண்க. அங்ஙனம் நோற்ற திருவாய்மொழியில் தேவாதிதேவனை அநுபவிக்கின்ற ஆழ்வார் மாவாய் பிளந்தானென்ற விசேஷணத்தையே முதற்பாட்டில் இட்டருளினர்; "வெம்மாபிளந்தான் தன்னை" என்றது காண்க. ப்ரதமப்ரபந்தத்தில் "இமையோர் தலைவா!" என்றும்; சரமப்ரபந்தத்தில் "அயர்வறுமமரர்களதிபதி" என்றும் தேவாதி தேவனையே முந்துற முன்னம் சேவித்தாராழ்வார். [சென்று நாம் சேவித்தால்] "வான நாயகனே! அடியேன் தொழவந்தருளே" என்று தேவாதிதேவனை நீர் உம்மிடம் வருமாறு அழைத்தீர்; அங்ஙனமல்லாமல் அவனிடம் நாம் சென்று சேவிக்கலாம் வாரும் என்றழைக்கிறாள் போலும். [ஆவாவென்று] "ஆவாவென விரங்கார் அந்தோவலிதே கொல், மாவாய் பிளந்தார் மனம்" என்றும், "அடியேற்கு ஆவாவென்னாயே" என்றும் நீர் விரும்பினபடியே மாவாய்பிளந்த பெருமான் உமக்கு ஆவாவென்பன் என்று காட்டுகிறபடி. [ஆராய்ந்து] "ஆரென்னையாராய்வார்" என்ற உம்முடைய குறையும் தீரும் என்று காட்டியபடி.

## ஒன்பதாம் பாட்டு—தூமணிமாடத்து.

482. தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய*
தூபங் கமழத் துயிலணைமேற் கண்வளரும்*
மாமான் மகளே மணிக்கதவந் தாள்திறவாய்*
மாமீ ரவளை யெழுப்பீரோ* உன்மகள்தான்
ஊமையோ அன்றிச் செவிடோ வனந்தலோ*
ஏமப் பெருந்துயில் மந்திரப் பட்டாளோ*
மாமாயன் மாதவன் வைகுந்த னென்றென்று*
நாமம் பலவும் நவின்றேலோ ரெம்பாவாய். ... ... 9

| | |
|---|---|
| தூ மணி மாடத்து | பரிசுத்தமான மாணிக்கங்கள் அழுத்திச்சமைத்த மாளிகையில் |
| சுற்றும் | — நாற்புறமும் |
| விளக்கு எரிய | — விளக்குகள் எரியவும் |
| தூபம் கமழ | (அகில் முதலியவற்றின்) வாசனைப்புகைகள் மணம் வீசவும், |
| துயில்அணைமேல் கண் வளரும் | மென்மையான படுக்கையின் மீது நித்திரை செய்யா நின்ற, |
| மாமான் மகளே | — அம்மான் பெண்ணே ! |
| மணி கதவம் | — மாணிக்கக் கதவினுடைய |
| தாள் | — தாழ்ப்பாளை |
| திறவாய் | — திறந்திடுவாயாக, |
| மாமீர் | — அம்மாமீ ! |
| அவளை | (உள்ளே உறங்குகிற) உன் மகளை |
| எழுப்பீரோ | — எழுப்ப மாட்டீரோ ? |
| உன் மகள் | — உன் மகளானவள் |
| ஊமையோ | —வாய்ப்புலன் இல்லாதவளோ? |
| அன்றி | — அல்லாமற் போனால் |
| செவிடோ | செவிப்புலன் இல்லாதவளோ ? (அன்றி) |
| அனந்தலோ | பேருறக்க முடையவளாயிருக்கின்றாளோ ? (அன்றி) |
| பெரு துயில் | — பெரிய படுக்கையில் |
| ஏமப்பட்டாளோ | — காவலிடப்பட்டாளோ ? (அன்றி) |
| மந்திரப் பட்டாளோ | மந்திர வாதத்தினால் கட்டுப் படுத்தப்பட்டாளோ ? |
| மா மாயன் | ‘அளவிறந்த ஆச்சரியச் செய்கைகளை யுடையவனே!’ |
| மாதவன் | — ‘திருமகள் கேழ்வனே !’ |
| வைகுந்தன் | — ‘ஸ்ரீவைகுண்டநாதனே!’ |
| என்று என்று | — என்று பலகால் சொல்லி |
| நாமம் பலவும் | (எம்பெருமானுடைய) திருநாமங்கள் பலவற்றையும் |
| நவின்று | — (வாயாரக்) கற்றோம் ; |

(இனியாகிலும் உன் மகள் உணரலாகாதா ?)
ஏல் ஓர் எம் பாவாய்—.

* * *—மைத்துனமையுறவுடையா ளொருத்தியை உணர்த்தும் பாசுரம் இது சுற்றும் விளக்குகள் விளங்கப் பெற்றுத் தூபங்கள் மணம் வீசாநிற்கப் பெற்ற நன்மணி மாடத்தில் மெல்லணைமேற் கண் துயில்கின்ற மாமான்மகளை நோக்கி “மணிக்கதவம் தாள் திறவாய்” என்று வெளியே நிற்பவர்கள் சொல்ல, அவள் அதனைக் கேட்டு வைத்தும் மறுமொழி ஒன்றுங் கூறாதாளாய்க்கிடக்க, அங்ஙனே கிடக்கும்படியைக் கண்ட அவள் தாயார் “இத்தனை பெண்பிள்ளைகள் வருந்தி வாசலிலே நின்று துவள, இவள் ஒரு பேச்சும் பேசாதே கிடந்துறங்குவது என்ன நீதி!’ என்று நெஞ்சிற் கொண்ட இரக்கம் முகத்திலே தோற்றும்படி யிருக்குமாற்றை இவ்வாய்ச்சிகள் கண்டு, ‘மாமீர்! அவளொருத்தி எங்கள் திரளிற் புகாமை யாலே நாங்கள் படும்பாட்டைக் கண்டீரே; உமது மகளைச் சிறிது உணர்த்தலாகாதா? நாங்கள் நெடும்போதாக நின்று கூவச்செய்தேயும் இவள் மறுமாற்ற மொன்றும் தருகின்றிலளே; இவள் ஊமையா? செவிடா? பேருறக்கம் பிடித்தவளா? அன்றி, இவள் எழுந்திருக்கக்

கூடாதென்று யாரேனும் படுக்கையில் காவலிட்டிருக்கிறார்களா? அன்றி மந்திரவாதத்தினால் ஸர்ப்பத்தைத் தடைகட்டுவது போல், இவள் படுக்கையினின்றும் எழுந்திருக்கவொண்ணாதபடி ஆரேனும் மந்த்ரப்ரயோகம் பண்ணிவிட்டார்களா? நாங்கள் ஒரு வகையாகவும் நிர்ணயிக்கமாட்டுகின்றிலோம்' என்ன; இதனைக்கேட்ட தாயார் 'நீங்கள் இங்ஙனே ஒன்றும் சங்கிக்கவேண்டா; அவளுகக்கும்படியான பகவந்நாமங்களைப் பகரத் தொடங்கினீர்களாகில் அவள் தன்னடையே உணர்ந்தெழுந்துவருவள்' என்ன; 'அங்ஙனமும் செய்தற்றது; நாங்கள் இவ்வளவாகச் சொன்ன பகவந்நாமங்கட்கு ஓர் வரையறையில்லை காணும்; இன்னும் யாம் என் செய்வோம்' என்கிறார்கள்.

தூமணி மாடம்=நம்மாழ்வார் திருவாய் மொழியில் திருத்துலைவில்லி மங்கலத்தை வருணிக்கத்தொடங்கி, "துவளில் மாமணிமாடமோங்கு துலைவில்லி மங்கலம்" என்றார்; இங்கு அங்ஙனன்றித் "தூ மணிமாடம்" எனப்பட்டது. இவ்விரண்டிற்கு முள்ளவாசியென் என்னில்; துவள்இல் என்ற அடைமொழியினால்—துலைவில்லி மங்கலத்து மாடங்களின் மணிகள், முதலில் துவளுற்றிருந்து பின்னர் துவளற்றனவாயின வென்பது தோற்றுவிக்கப்படும். இங்கு தூ என்ற அடைமொழியினால்—இங்குற்ற மாடத்து மணிகள் பிறப்பே தொடங்கிப் பரம பாவனங்களாய் எஞ்ஞான்றும் துவளின் ஸம்பந்தத்தைப் பெறாதன வென்பது தோற்றுவிக்கப்படும். (துவள்—தோஷம்) இங்கு, முக்தர்படியையும் நித்தியர்படியையும் நெஞ்சிற் கொள்க; முக்தராகிறார்—சில நாள் வரை ஸம்ஸாரஸாகரத்தில் அழுந்திக்கிடந்து, பின்னர் அப்பற்று அறப்பெற்றோர்; (இது, துவளில் என்றபடிக்கு ஒக்கும்.) நித்தியராகிறார்—என்றும் ஸம்ஸாரஸம்பந்தமேயில்லாதாராய் அநவரதம் பரவாஸுதேவன் பதவிணையிற் பரிசரியை பண்ணும் அநந்த கருட விஷ்வக்ஸேநர்கள் போல்வார்; (இது தூ என்றபடிக்கு ஒக்கும்.)

புறம்பே நின்று துவள்கின்ற எங்கள் நெஞ்சு இருண்டு புகையாநிற்க, உள்ளே சுற்றும் விளக்கெரியும்படியாகப் பெற்ற பாக்கியமே பாக்கியம்! என்னும் வயிற்றெரிச்சல் முதலடியில் தோற்றுமாறு காண்க.

"புறம்பே நின்று 'மணிக்கதவம்தாள் திறவாய்' என்கிறவர்கள் உள்ளெரிகிற விளக்கறிந்தபடி என்னென்னில்; மாணிக்கக்குப்பியிலே அகவாயிலுள்ளது நிழலிட்டுத் தோற்றுமா போலே தூமணிமாடமாகையாலே உள்ளெரிகிற விளக்குத் தோற்றுமிறே'' என்ற ஆறாயிரப்படி அருளிச்செயலை இங்கே கூட்டிக்கொள்க.

"தூபம் கமழ'' என்ற சொல்நயத்தால், கண்ணுக்குப் புகையாகத் தோற்றுகையன்றியே வெறும்பரிமளமேயாயிருக்குமாறு தோன்றுமென்ப. "தூமம் கமழ" என்றும் ஓதுவர்: துயிலணை—படுத்துக் கொண்டவுடனே உறக்கத்துக்குப் பரவசமாக்கவல்ல மெத்தையென்க; இதனால், அப்படுக்கையின் மென்மை, குளிர்த்தி முதலிய குணங்கள் விளங்கும். "மென்மலர்ப் பள்ளி வெம்பள்ளியாலோ" என்றபடி நாங்கள் பள்ளியிற்சாயப் பெறாதேயிருக்க, நீ துயிலணையிற் கண்வளர்வது நமது நட்புக்கு நன்றாகப் பொருந்துமம்மா! என வெறுத்துக் கூறுகின்ற சொற்போக்கு இது என்றுணர்க. "துயிலணைமேல் உறங்கும்" என்னாதே "கண்வளரும்" என்றது—பகவத்விஷயத்தில் அவகாஹித்தவர்கள் கௌரவிக்கத் தக்கவரென்ற கருத்தை காட்டுதற்கென்க. ஊடே வெறுத்துக் கூறுவதெல்லாம் ஆற்றாமையின் செயலத்தனையிறே.

[“ மாமான் மகளே] திருவாய்ப்பாடியிலே ஒருப்ரக்ருதி ஸம்பந்தம் தனக்கு உஜ்ஜீவந ஹேதுவாக ஆண்டாள் ஆசைப்பட்டபடி ” என்பது ஆருயிரப்படி.

“ ஊமையோ ? செவிடோ ? என்ற வினுக்களுக்கு உட்கருத்து :—ஆர்த்தர் விஷயத்தில் இரக்கமுற்று ‘ஐயோ !’ என்றொரு வாய்ச்சொல் சொல்வதற்கும் அவகாசமில்லையோ உன் மகளுக்கு ? ஆர்த்தரான எங்களுடைய கூக்குரல் செவிப்பட வொண்ணாதபடி உன் மகள் உள்ளே செய்யுங் காரியம் என்னே ?

அனந்தலோ ?—கண்ணபிரானோடு நெடும்போதாகக் கூடிக் களித்துப் படுக்கையில் இப்போதுதான் சாய்ந்தனளோ ? ஏமப்பெருந்துயில் மந்திரப்பட்டாளோ ?—உன் மகள் எங்களை உறங்கவொட்டாதவாறு போல அவளை ஆரேனும் உணரவொண்ணாத படி மந்திரவாதஞ்செய்து கட்டுப்படுத்தினரோ ? “ பெய்யுமாமுகில் போல்வண்ணா ! உன்றன் பேச்சுஞ் செய்கையும், எங்களை மையலேற்றி மயக்க உன்முகம் மாய மந்திரந்தான் கொலோ ? ” என்ற நாச்சியார் திருமொழியை இங்கு அநுஸந்திக்க.

ஏமம் என்பதை, ஹேம என்னும் வடசொல்லின் விகாரமாகக் கொள்ளில், கநகமயமான பெருந்துயிலில் மந்திரப்பட்டாளோ ? என்று பொருளாம். ஏமம்—இரா, இன்பம், உன்மத்தம், கலக்கம், களிப்பு, காவல், சேமம், திரைச்சீலை, புதையல், பொன், மயக்கம், விபூதி.

இவர்கள் இங்ஙனே வினவக்கேட்ட தாயார், “பெண்காள் ! நீங்கள் இவளது பிரகிருதியை உணர்ந்திருந்து இவளை எழுப்பவேண்டும் முறையை உணர்ந்திலீர்களே ; இங்ஙன மெழுப்பினால் இவள் எழாள். தென்றலுஞ் சிறு துளியும் பட்டாற்போல அவள் உகக்குந் திருநாமங்களை வாயார அநுஸந்தித்தீர்களாகில் சடக்கென உணர்ந்து வாராளோ ” என்ன ; அங்ஙனுஞ் செய்தற்றதென்கிறார்கள், கடையிரண்டடிகளால்.

மாமாயன் :—அபலைகளான பெண்களைத் தன்வசப்படுத்திக் கொள்ளுதற்குச் சாதனமான பல ஆச்சரிய குண சேஷ்டிதங்களை உடையவன் என்றபடி.

மாதவன் :—இடக்கை வலக்கை அறியாத இடைச்சிகளை மாத்திரம் வசப்படுத்திக் கொண்டவனல்லன் அவன் ; அல்லிமலர் மகளை இறையு மகலவொண்ணாதபடி மார்பில் அழுத்திக்கொண்டுள்ளவன் காண்மின் என்றவாறு.

வைகுந்தன் :—இங்ஙன் பெண்களை மாத்திரம் தோற்பிக்குமவனல்லன் ; கண்கள் துஞ்சாமே கண்டபடியே நிற்கும் நித்திய ஸூரிகளை ஒரு நாடாகவுடையவன் என்கை. என்றென்று என்றமையால் அவைபோல்வன பல திருநாமங்கள் கூறினமை தோன்றும்.

(ஸ்வாபதேசம்). நம்மாழ்வாருக்கு அடுத்த முந்தினவரான திருமழிசைப்பிரானை யுணர்த்தும் பாசுரமிது. இதில் மாமான் மகளே ! என்ற விளி ஒருவகையான தேஹஸம்பந்தத்தில் நோக்குடையது. ஆண்டாளுக்கும் திருமழிசை யாழ்வார்க்கும் ஒரு வகையான தேஹஸம்பந்தமுண்டு : அதாவது—ஸ்ரீதேசிகன் கோதாஸ்துதியில் “ கமலாமிவாந்யாம் கோதாம் ” என்றும் “ ஸந்த : பயோதி துஹிதுஸ் ஸஹஜாம் விதுஸ் த்வாம் ” என்றும் அருளிச் செய்தபடியே ஆண்டாள் ஸாக்ஷாத் ஸ்ரீமஹாலக்ஷ்மியாவள். “ பார்க்கவி லோகஜநநீ க்ஷீரஸாகரஸம்ப்வா ” என்ற அமரகோசத்தின்படியும் இதிஹாஸ

புராண வரலாற்றின் படியும் லக்ஷ்மி (ஆண்டாள்) ப்ருகு குலத்தில் தோன்றியவள். திருமழிசைப்பிரானும் ப்ருகு குலத்தில் தோன்றியவரென்பது சரித்திரஸித்தம். இத்தகைய ஸமாந குலஸம்பந்தம் இங்கு நோக்கத்தக்கது. ரிஷி குலத்திலே பிறந்து பிரம்பன் குடியிலேயானுர் அவர். ப்ராஹ்மண குலத்திலே பிறந்து கோபாலர் குலத்திலேயானுள் இவள். இதுவும் ஒற்றுமை நயம். [தூமணி மாடத்து] சிறந்த மாணிக்கக் குப்பியினுள்ளேயுள்ளது வெளியில் நிழலிட்டுத் தோன்றும். திருமழிசைப் பிரான் "உட்கிடந்த வண்ணமே புறம் பொசிந்து காட்டிடே" என்று வேண்டிக் கொண்டபடியே உள்ளிருந்த திருமால் அப்படியே வெளியிற் பொசிந்து காட்சி தந்தமை யால் இவர் தூமணிமாட மென்னத் தகுதியுடையார். [சுற்றும் விளக்கெரிய] விளக் காவது ஞானவொளி. "சாக்கியங் கற்ருேஞ் சமண்கற்ருேம் சங்கரனுராக்கிய ஆகம நூல் ஆராய்ந்தோம்," என்றபடி இவ்வாழ்வார் ஸகல மதங்களிலும் புக்கு ஸர்வதோ முகமான ஞான விளக்கம் பெற்றவராதலால் சுற்றும் விளக்கெரிதல் இவர்க்கு அஸா தாரணம். "யானறிந்தவாறு—ஆரறிவார்" என்றும் "என் மதிக்கு விண்ணெல்லா முண்டோ விலே" என்றும் இவரது பாசுரங்களினுலும் இது ஸித்தம். [தூபம் கமழ] சிறந்த ஞானமிருத்தல் மாத்திரம் பயன்படாது; அது நன்கு பரிமளிக்கவேண்டும். எம்பெருமானையன்றி வேறொரு தெய்வத்தைத் தொழாதிருத்தலே ஞானத்திற்குப் பரிமளம். "மறந்தும் புறந்தொழா மாந்தர்" என்பது இவ்வாழ்வாருடைய திரு வாக்காகும். [துயிலணை மேல் கண்வளரும்] இவ்வாழ்வாருடைய திருக்கண் செல்வது சயனத்திருக்கோலமான எம்பெருமான்களின்மீதுதான். கச்சி வெஃகாவிலும் திருக் குடந்தையிலுமே பெரும்பாலும் இவர் காலம் கழித்தது. சயனத்திருப்பதிகளையே ஒரு கோர்வையாக வெடுத்துப் பாசுரம் பாடினவரும் இவ்வாழ்வார்; நாகத்தணைக் குடந்தை வெஃகாத் திருவெவ்வுள் நாகத்தணையரங்கம் பேர் அன்பில்—நாகத்தணைப் பாற்கடல் கிடக்கு மாதி நெடுமால், அணைப்பார் கருத்தனுவான்" என்றது காண்க. [துயிலணை மேல் கண்வளரும் மாமானுடைய மகளே!] மகள் என்றதனுல் விதேயத்வம் சொன்னபடி. மகள் சொற்படி தந்தை கேட்பதும் தந்தை சொற்படி மகள் கேட்பதும் வழக்கம். மாமான் என்றது மஹா மஹான் என்றபடி. துயிலணைமேல் கண்வளரும் மாமான் யதோக்தகாரி யெம்பெருமான்; அப்பெருமாள் இவ்வாழ்வார் சொற்படி கேட்டவர்; 'கணிகண்ணன் போகின்ருன்—நீயுமுன்றன் பைந் நாகப் பாய் சுருட்டிக்கொள்' என்றபோது அப்படியே சுருட்டிக்கொண்டு புறப்பட்டார்; "உன்றன் பைந்நாகப்பாய் விரித்துக்கொள்" என்றபோதும் அப்படியே. இனி, துயிலணைமேற் கண்வளரும் மாமான்—ஆராவமுதன்; அப்பெருமாளும் "எழுந்திருந்து பேசுவாழி கேசனே" என்ற இவ்வாழ்வாரது வேண்டுகோளின்படி எழுந்திருந்தவர் என்பது ப்ரஸித்தம். [உன் மகள் தான் ஊமையோ] வாய்திறவாமலே ஹஸ்தசேஷ்டை முதலியவற்ருல் காரியம் செய்வது ஊமைகளின் பணி. இவவாழ்வாரும் யாத்திரையடைவில் பெரும்புலியூ ரென்னும் கிராமத்தில் ஒரு வேதியன் வீட்டுவாசல் திண்ணையில் சிறிது பொழுது எழுந்தருளியிருக்க அங்கு வேதமோதிக்கொண்டிருந்த அந்தணர்கள் நீறுபூத்த நெருப் புப்போலுள்ள ஆழ்வாருடைய மஹிமையைத் தெரிந்துகொள்ளாமல் அவரைக் கீழ்ச் சாதியராகவெண்ணி வேதாத்யயனம் அவருடைய காதிற்படலாகாது என்று கருதி ஒத்துத் தவிர்ந்திருக்க, அக்குறிப்பை யறிந்த ஆழ்வார் அவ்விடத்தை விட்டுத் தூரத் திற்சென்று வேருரகத்து மேடையில் வீற்றிருக்கையில் அந்த வேதியர்கள் மீண்டும் வேதமோதத் தொடங்கி, விட்ட வாக்கியம் தோன்ருது மயங்கி நிற்க, ஆழ்வார் அது

கண்டு கறுப்பு நெற்களைக் கையுகிராலே இடந்துபோட, அப்பொருளுள்ள வேத வாக்கியம் அவர்கட்குத்தோன்றிற்று: அதாவது—"க்ருஷ்ணானாம் வ்ரீஹிணாம் நகநிர்பிந்நம்" என்பது. உடனே அவர்கள் ப்ரதக்ஷிண ப்ரணாமாதிகளால் இவரை உபசரித்து க்ருதார்த்தராயினர் என்பது சரித்திர வரலாறு. இங்ஙனமாக வாய்திறவாமலே, இங்கிதத்தினால் காட்டினது பற்றி ஊமையோ என்றது. சொன்ன சொற்களைச் செவி யேற்காதவர் செவிடர்: அந்தச் செவிடும் இவரது சரிதையில் ப்ரஸித்தம்: முன் சொன்ன பெரும்புலியூரில் அந்தணரடிகள் யாகஞ் செய்துகொண்டிருந்த விடத்தில் இவ்வாழ்வாரை எழுந்தருள்வித்துக்கொண்டு போய்ச் சில மஹான்கள் இவர்க்கு அக்ர பூஜை செய்விக்க, அப்போது அங்கிருந்த பல சிசுபாலஜ்ஞாதிகள் எண்ணிறந்த வசை மொழிகளை வர்ஷிக்க, அவற்றை இவ்வாழ்வார் செவியேற்காதிருந்தனர் என்ற வரலாறு காண்க. [அனந்தலோ] தூக்கமோ என்றபடி, பரமைகாந்திகட்குத் தூக்கமாவது பாஹ்ய விஷயங்களிற் சிறிதும் நெஞ்சு செல்லாதிருக்கப் பெறுதலே. "உன்னைத் தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்றும் "தொழிலெனக்குத் தொல்லைமால் தன்னாமமேத்தப் பொழு தெனக்கு மற்றதுவே போதும்" என்று மருளிச் செய்யு மிவ்வாழ்வார்க்கு இந்த நிலைமையே அனந்தலாகும். [ஏமப்பெருந்துயில் மந்திரப் பட்டாளோ] மற்றையாழ் வார்களிற் காட்டிலும் இவ்வாழ்வாருடைய பரமைகாந்தித்வம் மிக விலக்ஷணம் என்பது இங்கு அறியத்தக்கது. "பிதிரு மனமிலேன் பிஞ்ஞகன்றன்னோடெதிர்வன், அவனெ னக்கு நேரான்" என்னும்படியான திருநாவிறு இவர்க்கே அஸாதாரணமன்றோ! இது தான் பெருந்துயில், எம்பெருமானை யொழிந்த மற்றையோரைக் கண்கொண்டு பாரா மையிற் பெருமை.

[மாமாயன்] "மாயமென்ன மாயமே" என்றும், "மாயமாய மாக்கினாய் உன்மாய முற்று மாயமே" என்றும் பலகாலும் எம்பெருமானது மாமாயங்களைப் பேசுகிறவர் இவ் வாழ்வார். [மாதவன்] "மாதவனை ஏத்தாதார் ஈனவரே" என்றவரும் இவ்வாழ்வாரே, "திருவில்லாத் தேவரைத் தேறேன்மின் தேவு" என்றதுங் காணலாம். [வைகுந்தன்] "வைகுந்தச் செல்வனார் சேவடிமேல் பாட்டு" என்றவர் இவ்வாழ்வாரே. வைகுந்தனது சேவடிமேல் தாம் பாசுரம் பாடினவராகச் சொல்லிக்கொண்டார். ஆகவே, மாமாயன், மாதவன், வைகுந்தனென்ற திருநாமங்கள் இவ்வாழ்வார்க்குப் பரமபோக்யங்களென்பது ஸூசிதம். ... ... ... ... ... ... (9)

483. **நோற்றுச் சுவர்க்கம் புகுகின்ற வம்மனாய்!***
**மாற்றமும் தாராரோ வாசல் திறவாதார்***
**நாற்றத் துழாய்முடி நாராயணன்* நம்மால்**
**போற்றப் பறைதரும் புண்ணியனால்* பண்டொருநாள்**
**கூற்றத்தின் வாய்வீழ்ந்த கும்பகரணனும்***
**தோற்று முனக்கே பெருந்துயில்தான் தந்தானோ***
**ஆற்ற வனந்த லுடையா யருங்கலமே***
**தேற்றமாய் வந்து திறவேலோ ரெம்பாவாய்.** ... ... **10**

| | |
|---|---|
| நோற்று | நோன்பு நோற்று |
| சுவர்க்கம் புகுகின்ற | ஸுகாநுபவம் பண்ணுகின்ற |
| அம்மனாய் | அம்மே ! |
| வாசல்திறவாதார் | வாசற்கதவைத் திறவாதவர்கள் |
| மாற்றமும் தாராரோ | ஒரு வாய்ச் சொல்லுங் கொடுக்கமாட்டாரோ ? |
| நாற்றம் துழாய் முடி | நறு நாற்றம் வீசாநின்றுள்ள திருத்துழாய் மாலையை அணிந்துள்ள திருமுடியையுடைய |
| நாராயணன் | நாராயணனும், |
| நம்மால் போற்ற பறை தரும் | நம்மால் மங்களாசாஸனம் பண்ணப் பெற்றுப் புருஷார்த்தங்களைத் தந்தருள்பவனும் |
| புண்ணியனால் | தர்மமே வடிவுகொண்டு வந்தாற் போன்றவனுமான இராமபிரானால் |
| பண்டு ஒரு நாள் | முன் ஒரு காலத்திலே |
| கூற்றத்தின் வாய் வீழ்ந்த | யமன் வாயில் (இரையாக) விழுந்தொழிந்த |
| கும்பகரணனும் | கும்பகர்ணனும் |
| தோற்று | தோல்வியடைந்து |
| பெருந்துயில் | (தனது) பேருறக்கத்தை |
| உனக்கே தான் தந்தானோ | உனக்கே தான் கொடுத்து விட்டானோ ? |
| ஆற்ற அனந்தல் உடையாய் | மிகவும் உறக்கமுடையவளே ! |
| அருங்கலமே | பெறுதற்கரிய ஆபரணம் போன்றவளே ! |
| தேற்றம் ஆய் வந்து திற | தெளிந்து வந்து, (கதவைத்) திறந்திடு ; |

எல் ஓர் எம் பாவாய்—.

'எல்லாருமுடன் கூடிக் குளிக்கக் கடவோம், உடன் கூடி நோன்பு நோற்கக் கடவோம். உடன்கூடிக் கிருஷ்ணாநுபவம் பண்ணக்கடவோம்' என்று சொல்லிவைத்து, நாங்கள் உணர்த்தவும் உணராதே கிடந்துறங்குதியேலும், 'இப்போது கதவைத் திறக்க அவகாசமில்லை' என்றொரு வாய்ப்பேச்சுத்தான் சொன்னாலாகாதோ? இங்ஙனொத்த பேருறக்கம் உனக்கு வந்த வழி யாதுகொல்? பண்டு இராமபிரானது அம்புக்கு இலக்காகி மாண்டொழிந்த கும்பகரணன் தனது உறக்கத்தை உனக்குத் தந்தொழிந்தானோதான்? ஆ! சால நன்று இது; இப்பேருறக்கம் உனக்கு ஆகாதுகாண்; நீ ஒருத்தி எங்கள் திரளில் வந்து கூடாமையால் இத்திரள் இருள் மூடிக்கிடக்குமாற்றை வந்து காணாய் தோழி! என்கிறார்கள்.

முதலடிக்கு மூன்றுவகையாகக் கருத்துரைக்கலாம்:—கண்ணபிரானுடைய திருமாளிகைக்கு அடுத்த திருமாளிகையாய் இடைச் சுவாற்றிருப்பதனால், கண்ணபிரானோடு இடைவிடின்றிச் சுகாநுபவம் பண்ணும்படி நீ நோற்ற நோன்பு என்கொல்? முன்பிறவியில் நோற்ற நோன்பின் பயனை இப்போது கிருஷ்ணாநுபவ ஸுகம் பெற்று நிற்றி என்கிறாளென்பது முதற் கருத்து.

பொழுது விடிந்தபின்னரும் உணர்ந்தெழுந்து வாராமையினால், அம்மே! இங்ஙன் கிடந்துறங்காநின்ற நீயோ நோன்பு நோற்றுச் சுகாநுபவம் பண்ணப்போகிறாய்? நினைவுக்கும் செயலுக்கும் பொருத்தம் அழகிதாயிருந்தது! என ஏசியவாறாகக் கொள்ளுதல், இரண்டாங்கருத்து.

எல்லாருமொக்கக்கூடி நோன்பு நோற்றுக் கிருஷ்ணாநுபவஸுகம் பெறுவோம்' என்று சொல்லிவைத்து, நீ தனியே நோன்பு நோற்றுச் சுகாநுபவம் பண்ணுவது

என்ன தருமம்! என வெறுக்கின்றவாருகக் கொள்ளுதல், மூன்ருங் கருத்து. இவள் நோற்ற நோன்பாவது—ஸித்த ஸாதந ஸ்விகாரமென்க. * விது: க்ருஷ்ணம் ப்ராஹ் மணுஸ்தத்வதோயே தேஷாம் ராஜந்! ஸர்வயஜ்ஞாஸ் ஸமாப்தா:* என்ற மஹாபாரதங் காண்க.

ஸ்வர்க்கமென்ற வடசொற்றிரிபாகிய சுவர்க்க மென்னுஞ் சொல், இங்குச் சுகத்தைச் சொல்லிற்று. "யஸ்த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்கோ நிரயோ யஸ்த்வயா விநா" [உன்னுடன் கூடி யிருத்தல்—சுவர்க்கம்; உன்னைப் பிரிந்திருத்தல்—நரகம்] என்ற ஸ்ரீராமாயணம் நோக்கத்தக்கது. **புகுகின்ற** என்ற அடைமொழி—உள்ளே கிருஷ்ணு நுபவ ஸுகம் நிகழுமாற்றைக் கூறும்; இதனல் அநுபவத்தில் இடைவீடின்மையும் தோற்றுமென்ப.

**அம்மனுய்!** என்ற விளியால்—நீ இங்ஙன் தனியே ஸுகாநுபவம் பண்ணுவது உன் பெருமைக்குப் பொருந்து மத்தனை யன்றித் தோழமைக்குத் தகாதென்பது போதரும். **அம்மனுய்**—அம்மனை என்பதன் ஈறு திரிந்தவிளி; தாயே! என்று பொருள்.

அசோக வநத்திற் பிராட்டி களிப்பின் மிகுதியால் "ப்ரஹர்ஷேணுவருத்தா ஸா வ்யாஜஹார ந கிஞ்சந" என்றபடி ஒன்றும் பேசாதே திடுக்கிட்டுக் கிடந்தாற்போல, இவளும் இவர்களது மதுரமான வாய்மொழியைக் கேட்டுப் பரமாநந்தத்திற்குப் பரவசப் பட்டிருந்தமையாலும், 'இவர்களுக்கு அடிச்சியாகிய என்னை இவர்கள், 'தாயே!' என்று விளித்துப் பழியிடுகின்றனரே' என்ற உள் வெதுப்பினுலும், 'நாம் கிருஷ்ணுநுபவம் பண்ணுவதாக இவர்கள் பழியிடா நின்ருர்கள்; இத்தருணத்தில் நாம் இவர்கட்கு மறு மொழி கூறுதல் தகாது' என்ற நினைவினுலும் அவள் பேசாதே கிடந்தாள்; அவளது கருத்தை அறியாத இவர்கள், தாங்கள் வெளியே நின்று துவள்கிற துவட்சி பொறுக்க மாட்டாமல், "மாற்றமுந் தாராரோ வாசல் திறவாதார்" என்கிருர்கள். நீ வாயைத் திறவாதொழியினும் கதவையாகிலுந் திறக்கலாகாதோ? என்றவாறு. உன் உடம்பைக் கிருஷ்ணனுக்குத் தந்தால், உன் பேச்சை எங்களுக்குத் தரலாகாதோ? என்றிப் புடைகளிலே கருத்துரைப்பர்.

முதலடியில் **'அம்மனுய்'** என முன்னிலைப்படுத்தி விளித்தமைக்கு ஏற்ப "மாற்ற முந் தாராயோ வாசல் திறவாதாய்" என முன்னிலையாகவன்றே கூற அடுப்பது; படர்க்கையாகக் கூறியுள்ளவிது பொருந்துமாறென் எனில்: "ஓரிடம் பிறவிடந்தழுவலு முளவே" (நன்னூல்) என்பது இலக்கணமாகலின் இது பொருந்துமென்க.

இங்ஙன் இவர்கள் பழியிட்டுக் கூறுகின்றமையை உணர்ந்த அவள், 'ஐயோ! நம் மேல் இவர்கள் வீண்பழி இடுகின்றனரே; இவர்கட்கு ஒரு மறுமொழி சொல்லியாகிலும் பிழைப்போம்' என்றெண்ணி, "தோழிகாள்! நீங்கள் நெடும்போதாக இங்ஙனே பழி யிடுவதென்? கண்ணபிரான் இங்கு இல்லையே" என்ன; அதுகேட்ட இவர்கள் அம்மா! நன்று சொன்னுய்; நீ மறைத்தாயாகிலும் திருத்துழாய் மணம் அவனிருப்பைக் கோட் சொல்லித் தாரா நின்றதே; அதனை நீ மறைக்கவல்லையல்லையே' என்ன; அதற்கு அவள், "அந்தோ! பாவமே!! அவன் இப்போது இங்குக் கிடந்தால்தான் துழாய் மணநாறுமென்று கருதுகின்றீர்களோ? ஒருகால் அவன் அணைத்துவிட்டால் அந்நாற்

றம் நாறு குளிக்கு நிற்குமென்பதை நீங்கள் அறியீரோ? அன்றியும், நான் உங்களைப் பிரிந்துவந்து படுக்கையிற் சாய்ந்தபோதே தொடங்கி நீங்கள் வாசலைப்பற்றிக்கொண்டு நிற்கிறீர்கள்; கட்டுங்காவலுமான வாசலிலே அவன் எங்ஙனம் புகவல்லன்? இவற்றை ஆராயாது நீங்கள் பழியிடுவது தருமமன்று'' என்ன; "அவன் எங்களைப் போலக் கதவு திறக்குந்தனையும் காத்திருக்கவேணுமோ? அவன் நாராயணனென்பதை நாங் களறியோமோ, நீதான் அறியாயோ; அவன் வியாபகனாயிருந்து வைத்து, வேண்டின விடத்தே வந்து தோற்றமாட்டிற்றிலனாகில் அவனுடைய வியாப்திக்குப் பிரயோஜனம் என்னாகும்?'' என்று இவர்கள் சொல்ல; அவள் மறுமாற்றஞ்சொல்ல வல்லமையற்று வாய்திறவாதே கிடந்து உறங்குமவள் போலப் பாவனை செய்தாள்; குறட்டைவிட்டாள்; அதனைச்செவியுற்ற இவர்கள், 'அம்மா! கும்பகரணனும் உனக்குத்தோற்றுத் தனது உறக்கத்தை உனக்கே தந்தொழிந்தனனோ?' என்கிறார்கள்.

கும்பகரணன் இவட்குத் தோற்றுத் துயில் தருகையாவதென் எனில்;

சிற்பிகள் இருவர்கூடி, 'நாமிருவரும் தனித்தனியே ஒரு பதுமை யெழுதுவோம், பின்பு மத்தியஸ்தர்கள் எவனுடைய சிற்பத்தை இகழ்ந்துரைக்கின்றனரோ, அவன் அன்றுமுதல் சிற்ப வேலையை விட்டிட வேண்டியது' என்று ஸமயபந்தஞ் செய்து கொண்டு, இருவருஞ் சித்திரமெழுத, முடிவில் இகழ்வடைந்தோன் முன் ஸமயபந்தத் தின்படி சிற்பத்தொழிலை விட்டிடுமாறுபோல, கும்பகர்ணனும் இவளுங்கூடி, 'நாமிரு வரும் உறங்குவோம்; உறக்கத்தில் தோல்வியடைந்தோர் உறக்கத்தை விட்டிடவேண் டியது' என்று ஸமயபந்தஞ்செய்துகொண்டு உறங்க, அதில் கும்பகரணன் தோல்வி யடைந்து, ஸமயபந்தத்தின்படி உறக்கத்தை விட்டிட, அவ்வுறக்கத்தை இவள் கைப் பற்றினள் எனக் கவிமரபிற்கேற்பச் சமத்காரந் தோற்றக் கூறப்பட்டுள்ளமை அறிக. இதனால் இவளது உறக்கத்தின் ஒப்புயர்வின்மை கூறியவாறாம்.

"ஸ்ரீ பரசுராமாழ்வானை வென்று பெருமாள் அவன் கையில் வில்லை வாங்கினாற் போலே, நீயும் அவனை வென்று நித்திரையைக் கைக்கொண்டாயோ?'' என்பது ஆறா யிரப்படி.

**கூற்றத்தின் வாய்வீழ்ந்த**—தன்னால் சிறையிலடைக்கப்பட்டிருந்த யமனுடைய வாயில் விழ்ந்தானென்க. **கூற்றம்**—உடலையு முயிரையும் வேறு கூறுக்குபவன், யமன். "வாய்விழுந்த'' என்றும் ஓதுவர்.

இராமபிரானை **புண்ணியன்** என்றது—**"ராமோ விக்ரஹவாந் தர்ம:"** என்னும் பிரமாணத்தை அடியொற்றியதாம்.

'அஸஹ்யாபசாரிகளில் அக்ரேஸரனை இராக்கதப் பையலோடொக்க நம்மைச் சேர்க்கின்றனரே இவர்கள்! இஃது என்ன கொடுமை! இனி வெளியிற் சென்று முகங் காட்டுவோம்' என்று எண்ணி, தான் உணர்ந்தமை தோற்றச் சோம்பல் முறித்தாள்; அதனை உணர்ந்த இவர்கள், 'ஓ! உறக்க மிருந்தபடி யென்!' என வியந்து, "ஆற்ற அனந்தலுடையாய்!'' என விளிக்கின்றனர். பின்பு சாலகவாசலாலே அவளுணர்ந்த படியை உற்று நோக்கினார்கள்; அவள் தங்கள் திரளில் வந்து கூடினால் நவரத்நமாலை யில் நாயகக்கல் அழுத்தினாற்போலாமெனக் கருதி, **அருங்கலமே!** என்கிறார்கள். நாயக

மணி இல்லாத ஹாரம்போல் இத்திரள் இருள் மூடிக்கிடக்கிறது; இதனை நீ விளக்க வாராய் என விளித்தவாறும்.

இவர்களுடைய ஆதராதிசயத்தை உணர்ந்த அவள் துணுக்கென்று வரப் புறப்பட, அஃதறிந்த இவர்கள், "தேற்றமாய் வந்து திற" என்கிறார்கள். புறப்பட்டு மேல் நிலங்களில் நின்று தடுமாறாதே தெளிந்து வந்திழிந்து திற என்றபடி. இதற்கு மற்றொரு வகையாகவுங் கருத்துரைக்கலாம்:—

பஞ்சவடியிற் பிராட்டியைப் பிரிந்த இராமபிரான் கிஷ்கிந்தையிற் புக்கு ஸுக்ரீவ மஹாராஜனை நண்பனாகக் கொண்டு வாலியை வதைசெய்து மால்யவத் பர்வதத்தில் கார்காலத்தைக் கழித்தவனந்தரம், 'ஸுக்ரீவன் பிரதிஜ்ஞைபண்ணியிருந்தபடி இன்றுகாறும் படை திரட்டிக் கொண்டு போர்க்குப் புறப்படவில்லை' என்ற அளவற்ற சீற்றத்தினால் இளையபெருமாளை நியமித்தருள, அவரும் அந்நியமநத்தைச் சிரமேற் கொண்டு ஸுக்ரீவனது பள்ளியறை வாசலிற் போந்து நாணொலியைத் தலைப்பெய்விக்க, அவரது சீற்றத்தைத் தணிக்கக்கருதிய தாரை வெளிவரும்போது, ஸம்போக லக்ஷணங்களை மறைத்திடாது அரைகுலையத்தலை குலைய வந்தாற்போல வாராதே கொள்; இத்திரளில் உன்னை நியமிக்கக் கடமைப்பட்ட குருகுல மாதருமுளராதலால் ஸுரத சின்னங்களை நன்கு மறைத்து ஸதஸ்ஸில் வருகைக்கு உரிய கோலத்துடன் வந்து திறவாயாக என்கிறார்களென்றுமாம்.

"ஊராகத் திரண்டுகிடக்கிறது; அவர்களிலே உன்னையும் நியமிக்க வல்லாருண்டு' அவர்கள் முன்னே படுக்கையில் சாய்ந்தபடியே வாராதே உன்னைப் பேணிக்கொண்டு ஸதஸ்யையாய் வந்து திற" என்பது ஆறாயிரம்.

ஸித்தஸாதந ஸ்வீகாரம்பண்ணி, உபாயாத்யவஸாயத்தில் நிறைந்த ஊற்றமுடைய மஹாநுபாவரை உணர்த்துதல், இப்பாட்டுக்கு உள்ளுறைபொருளாம்.

**(ஸ்வாபதேசம்)** திருமழிசை யாழ்வாருக்கு அடுத்த முந்தியவரான பேயாழ்வாரை யுணர்த்தும் பாசுரமிது. ஓடித்திரியும் யோகிகளாய் ஒருவரோடு ஒருவர் சேராமல் ஸஞ்சரித்துக் கொண்டிருந்த பொய்கையார் பூதத்தார் பேயார் இம்மூவரையும் ஒன்று சேர்த்து அநுபவிக்கக் கருதிய எம்பெருமான் ஒரு பெருமழையை வியாஜமாக்கித் திருக்கோவலிடைகழியில் நெருக்கி யநுபவித்தானென்பது வரலாற்றின் சுருக்கம். இப்பேயாழ்வாரைப் பற்றித் திருவரங்கத்தமுதனார் நூற்றந்தாதியில் அருளிச் செய்யுமிடத்து "மன்னிய பேரிருள் மாண்டபின் கோவலுள் மாமலராள் தன்னோடு மாயனைக் கண்டமை காட்டும் தமிழ் தலைவன்" என்றார். பொய்கையாரும் பூதத்தாரும் இருவிளக்கேற்றியிருளையகற்ற, இவ்வாழ்வார் "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்று தொடங்கிப் பலாநுபவம் செய்தருளினர் என்பர் ஆன்றோர். அவ்வர்த்தமே யிங்கு முதலடியிற் பொலியும். **நோற்று**—மற்றையிரண்டு ஆழ்வார்களும் விளக்கேற்றுகையாகிற உபாயாநுஷ்டானஞ் செய்யவே என்றபடி. சுவர்க்கமாவது ஆனந்தாநுபவம். "யஸ்த்வயாஸஹ ஸஸ்வர்க்கோ நிரயோ யஸ் த்வயாவிநா" என்று ஸ்ரீ ராமாயணத்தில் பிராட்டி அருளிச் செய்ததுங் காண்க. **"வாசல் திறவாதார்"** என்றது பேயாழ்வார்க்கு மிகவும் பொருத்தமான லிங்கம். திருக்கோவ லிடைகழியில் பொய்கையார் முன்னே புகுந்து தாளிட்டுக் கொண்டார்; பிறகு பூதத்தார் வந்து சேர

அவர்க்கு அப்பொய்கையார் வாசல் திறந்தார். பிறகு வந்து சேர்ந்த பேயார்க்குப் பூதத்தார் வாசல் திறந்தார். இப்பேயார்க்குப் பிறகு ஒருவரும் வந்து புகாமையினால் வாசல் திறக்கவேண்டிற்றில்லை. ஆகவே வாசல் திறவாதார் என்றது பேயாழ்வார்க்கு மிகப்பொருத்தமாக அமைந்த குறிப்பு. [நாற்றத்துழாய்முடி நாராயணன்] இவ்வாழ்வாருடைய பாசுரங்கள் திருத்துழாய் மயமாகவேயிருக்கும். *திருக்கண்டேனுக்கு அடுத்த பாசுரம் "பொன்தோய்வரை மார்பில் பூந்துழாய்" என்பது. அதற்கடுத்த பாசுரம் "மலராள் தனத்துள்ளான் தண்டுழாய் மார்வன்" என்பது. முடிவுபாசுரத்திலும் "தண்டுழாய்த்தார் வாழ் வரை மார்பன்" என்றார். இடையிலும் பல பாசுரங்கள் காண்க. ஒன்பதாவது பாசுரத்தில் [நாமம் பல சொல்லி—யென்பதில்] நாராயணனையும் திருத்துழாயையும் கண்ணனையும் சேர்த்துப் பாடினார் பேயார். இதுவும் ஒரு சிறந்த பொருத்தம். "காண்காணென விரும்பும் கண்கள்" என்று ஒரு நொடிப்பொழுதும் கண்மூடி யிருக்க மாட்டாமையைச் சொல்லிக்கொண்ட நீர் கும்பகர்ணனுக்கும் மேலாக இன்னமும் துயில் கொள்ளல் தகுதியோ என்கிறாள் பண்டொருநாளென்று தொடங்கி. இப்பாட்டில் நட்ட நடுவில் இராமபிரானுடைய திவ்ய சரித்திரமொன்றை ஆண்டாள் அமைத்தது பேயாழ்வாருடைய திருவந்தாதியில் நட்ட நடுவில் "அவனே—இலங்காபுரமெரித்தானெய்து" என்றும் "எய்ததுவும் தென்னிலங்கைக் கோன்விழ" என்றும் அருளிச்செய்தமைக்கு நன்கு ஒக்கும். திருமழிசையாழ்வாரையுணர்த்தின் கீழ்ப்பாட்டில் அனந்தலோ என்று வெறும் அனந்தலே சொல்லிற்று. இப்பாட்டில் ஆற்றவனந்தலுடையாய்! என்கிறது—மழிசையர் கோனுக்கும் இவ்வாழ்வார் ஆசாரியராதலால் விசேஷணமிட்டபடி. அனந்தல் என்று ஹேயமான உறக்கமன்று சொல்லுகிறது. * உரோவிந்யஸ்த ஹஸ்தாஸ்தே நித்ராயந்தே ஸுநிர்ப்பரா:— என்று பகவச் சாஸ்திரங்களில் கொண்டாடப்பட்ட 'அனந்தல்' பரமைகாந்தித்வ ஸீமா பூமியைக் காட்டுமது. [அருங்கலமே!] எம்பெருமானது திருவருளை மிக அருமையாகப் பெற்ற ஸத்பாத்ரமே! என்றபடி. பாசுரம் தொடங்கும்போதே "திருக்கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்று ஆனந்தமாகத் தொடங்கப் பெற்ற பகவத் பரமக்ருபா பாத்ரபூதர் மற்றொரு ஆழ்வாரில்லையே. [தேற்றமாய் வந்துதிற] உம்முடைய திருநாமமோ பேயார்; பேய்த்தனமாக வாராமல் தேறி வந்து திறவும் என்கிறாள். ... (10)

484. கற்றுக் கறவைக் கணங்கள் பலகறந்து*
செற்றார் திறலழியச் சென்று செருச்செய்யும்*
குற்றமொன்றில்லாத கோவலர்தம் பொற்கொடியே*
புற்றரவல்குற் புனமயிலே போதராய்*
சுற்றத்துத் தோழிமாரெல்லாரும் வந்து* நின்
முற்றம் புகுந்து முகில்வண்ணன் பேர்பாட*
சிற்றாதே பேசாதே செல்வப்பெண்டாட்டி* நீ
எற்றுக் குறங்கும் பொருளேலோ ரெம்பாவாய். ... ... 11

| | | | | |
|---|---|---|---|---|
| கன்று கறவை | கன்றுகிய பசுக்களினுடைய | | செற்றார் | — சத்துருக்களினுடைய |
| | | | திறல் அழிய | — வலி அழியும்படி |
| பல கணங்கள் | — பல திரள்களை | | சென்று | (தாமே படையெடுத்துச் சென்று |
| கறந்து | — கறப்பவர்களும் | | | |

| | |
|---|---|
| செரு செய்யும் | — போர் செய்யுமவர்களும் |
| குற்றம் ஒன்று இல்லாத | ஒருவகைக் குற்றமும் அற்றவர்களுமான |
| கோவலர் தம் | கோபாலர்களுடைய (குடியிற் பிறந்த) |
| பொன் கொடியே | — பொன்கொடி போன்றவளே! |
| புற்று அரவு அல்குல் புனமயிலே | புற்றிலிருக்கிற பாம்பின் படம் போன்ற அல்குலையும், காட்டில் (இஷ்டப்படி திரிகிற) மயில் போன்ற சாயலையுமுடையவளே! |
| செல்வம் பெண்டாட்டி | செல்வமுள்ள பெண் பிள்ளாய்! |
| போதராய் | — (எழுந்து) வருவாயாக. |
| சுற்றத்து தோழிமார் எல்லாரும் | பந்துவர்க்கத்திற் சேர்ந்தவர்களும் தோழிமார்களுமாகிய எல்லாரும் |
| வந்து | — (திரண்டு) வந்து |
| நின் முற்றம் புகுந்து | உனது (திருமாளிகையின்) முற்றத் தேறப் புகுந்து |
| முகில் வண்ணன் பேர் பாட | கார்மேக வண்ணனை கண்ணபிரானுடைய திருநாமங்களைப் பாடச் செய்தேயும் |
| நீ | — (பெருமக்கமுடைய) நீ |
| சிற்றாது | — சலியாமலும் |
| பேசாது | — (ஒன்றும்) பேசாமலும் |
| உறங்கும் பொருள் எற்றுக்கு | உறங்குவது என்ன பிரயோஜனத்திற்காகவோ? (அறியோம்) |
| | எல் ஓர் எம் பாவாய்—. |

* * *—கண்ணபிரான் ஊர்காகா ஒரு பிள்ளையாய் அனைவராலுங் கொண்டாடப்பட்டு வளர்ந்தருளுமாறுபோல, ஊர்க்காக ஒரு பெண்பிள்ளையாயிருப்பாளாய், கணவனோடு கலவி செய்கைக்குப் பாங்கான பருவமுடையளாய், 'அவனைப் பெறுதற்கு நானோ நோற்பேன்? வேணுமாகில் அவன்றானே நோற்று வருகிறான்' என்று கிடக்கிறாளொருத்தியை உணர்த்தும் பாசுரம், இது.

உனது உறவுமுறையார் தோழிமார் என்ற வர்க்கங்களில் ஒருவர் தப்பாமல் அனைவருந் திரண்டுவந்து எம்பெருமான் திருநாமங்களைப் பாடாநிற்க, நீ உடம்பிலும் அசைவின்றி வாயிலும் அசைவின்றி இங்ஙனே கிடந்துறங்குவது என்ன பயனைக் கருதியோ அறியோம் என்கின்றனர். முதலிரண்டடிகள் கோவலர்க்கு அடைமொழி.

ராஜகுமாரன் முலைசரிந்த பெண்டிரைப் பாராதவாறுபோலக் கண்ணபிரான் கன்றுகளை யன்றிப் பசுக்களைப் பெரும்பான்மையாகக் காணக்கடவனல்லனாதலால், இவன் தனது கரஸ்பர்சத்தினாற் பசுக்களையுங் கன்றாக்கி யருள்வனென்க.

"கணங்கள் பல" என்றமையால் கறவைகள் தனித்தனியே எண்ணமுடியாமையே யன்றியே அவற்றின் திரள்களும் எண்ணமுடியா வென்பது தோற்றும்.

எம்பெருமானது மேன்மையைப் பொறாதார் எம்பெருமானடியார்க்குப் பகைவர் எம்பெருமானடியாரின் மேன்மையைப் பொறாதார் எம்பெருமானுக்குப் பகைவர். இவ்விருவகைப் பகைமையுங் கம்ஸனுக்கு உண்டென்பது, "தீய புந்திக்கஞ்சனுன்மேற் சினமுடையன்" என்ற பெரியாழ்வார் திருமொழியினாலும், "சாதுசனத்தை நலியுங் கஞ்சனை" என்ற திருவாய்மொழியினாலும் விளங்கும்.

"கோவலர்தம் பொற்கொடியே" என்ற விளியினால், ஜநகராஜன் திருமகள் "ஜநகா நாம் குலே கீர்த்திமாஹரிஷ்யதி மேஸுதா" என்றபடி ஜநககுலத்திற்குப்புகழ் படைத்தாற்போல, இவள் கோவலர் குடியை விளக்கஞ்செய்பவளென்பதும், ஒரு கொள்கொம்போடு அணைந்தன்றி நிற்கமாட்டாதகொடிபோல ஒரு கணவனோடு புணர்ந்

தன்றித் தரிக்கமாட்டாதவளென்பதும் போதருமென்க. இத்தால், எங்களோடு கூடி, உனக்குக் கொள்கொம்பான கிருஷ்ணனைச் சேரப்பாராய் என உணர்த்தியவாறுமென்க.

**புற்று அரவு அல்குல்**—புறம்பு புறப்பட்டுத் திரிந்து புழுதிபடைத்த உடம்புடைத்தாயிருக்கை யன்றியே தன் இருப்பிடந் தன்னிலே கிடக்கும் அரவரசின் படமுங் கழுத்தும் போல ஒளியையும் அகலத்தையுமுடைய நிதம்பத்தையுடையவளே! என்றபடி. இவர்கள் தானும் பெண்டிராயிருக்கச் செய்தே இவளுடைய அல்குலை வருணித்தது—நெஞ்சினால் ஆண்மை பூண்டமையாலென்க. "பெண்டிருமாண்மை வெஃகிப்பேதுறு முலையினாள்" (சீவக சிந்தாமணி) என்றது காண்க. இனி, "கண்ணிற் காண்பரேல் ஆடவர் பெண்மையை அவாவுந் தோளினாய்," (கம்பராமாயணம்.) "வராக வாமனனே அரங்காவட்ட நேமிவல வாராகவா உன் வடிவுகண்டால் மன்மதனும் மடவாராக ஆதரஞ் செய்வன்" (திருவரங்கத்தந்தாதி.) என்பவாதலால், ஆண் பெண்ணுகு மிடமு முண்டென்று உணர்க. **"பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்"** என்று—பெருமாள் ஆண்களையும் பெண்ணுடை உடுக்கப் பண்ணுமாபோலே பெண்களை ஆண்களாக்குகிறது இவளுடைய அல்குல்' என்ற ஆறுயிரப்படி அருளிச்செயல் இங்கு அறியற்பாலது. புற்றுக்குள்ளே யடங்கின பாம்புபோலே நுட்பமான இடையை யுடையவளே! என்னவுமாம்.

நான் புறப்பட மற்றெல்லாரும் வந்தாரோ? என்று அவள் கேட்க; கூறுகின்றனர். [**சுற்றத்துத் தோழிமார் இத்தியாதி.**] சுற்றத்தாரும் தோழிமாருமென்றுவது, சுற்றத்தாரான தோழிமார் என்றுவது உரைக்கலாம். "'புனமயிலே!' முகில்வண்ணன் பேர்பாட, நீ எற்றுக்குறங்கும் பொருள்" என இயைத்து, மயில் முகிலின் பேரைக் கேட்டவுடனே களித்துக் கூத்தாடவேண்டி யிருக்க, நீ இங்ஙனே கிடந்துறங்குவது என்றிய? என க்ஷேபிக்கின்றனரெனக் கருத்துக் கூறுக.

**சிற்றாதே**:—சிற்றல்-சிதறுதல்; அங்கங்களை அசைத்தலுஞ் செய்யாமல் என்றபடி.

**(ஸ்வாபதேசம்.)** பேயார்க்கு அடுத்த முந்தினவரான பூதத்தாரை யுணர்த்தும் பாசுரமிது. இதில், "குற்ற மொன்றில்லாத கோவலர் தம் பொற்கொடியே!" என்ற விளி பூதத்தார்க்கு நன்கு பொருந்தும். பல பொருள்களை யுடையதான **கோ** என்னும் சொல் கோதா என்ற விடத்திற்போல ஸ்ரீ ஸூக்தியைச் சொல்கிறதிங்கு. **கோவலர்**—ஸ்ரீ ஸூக்திகளை யருளவல்லவர்களான ஆழ்வார்கள். "குற்றமொன்றில்லாத" என்ற விசேடணம் முதலாழ்வார்கள் மூவர்க்கே பொருந்தும்; யோநிஜத்வமாகிற வொரு குற்றம் மற்றை யாழ்வார்களுக்குண்டு; அக்குற்ற மொன்றும் இல்லாத கோவலர்—முதலாழ்வார்கள்; அவர்களுள் **பொற்கொடியே!**—"கோல்தேடி யோடுங் கொழுந்ததே போன்றதே மால்தேடி யோடும் மனம்" என்கிற பாசுரத்தில் தம்மை ஒரு கொடியாகச் சொல்லிக்கொண்டவர் பூதத்தாழ்வாரே யாவர். எம்பெருமானாகிற உபக்நத்தைத் தேடிச் செல்லுகின்ற கொடிபோல்வேன் நான் என்றவர் இவரேயிறே. "கற்றுக் கறவைக் கணங்கள் பல கறந்து" என்பது முதலாழ்வார் மூவர்க்கும் பொதுவான வாசகம். கற்றுக் கறவை—கன்றாகிய கறவை. (கறவை யென்பதனால் ஸ்ரீ ஸூக்தி விவ

க்ஷிதம்.) மற்றை யாழ்வார்கள் பெரிய பெரிய பாசுரங்களை யளித்தார்கள். முதலாழ்வார்கள் அங்ஙனன்றிக்கே வெண்பாவாகிய மிகச் சிறிய பாசுரங்களை யளித்தார்கள். பொய்கையாழ்வாரருளிய திருவந்தாதி கறவைக் கணம்; பூதத்தாழ்வார் திருவந்தாதியும் சேர்ந்து கறவைக் கணங்கள்; பேயாழ்வார் திருவந்தாதியும் சேர்ந்து கறவைக் கணங்கள் பல. க்ரமேண ஏகவசந த்விவசந பஹு-வசநங்கள் இணங்கின அழகு காண்க. [செற்றார் திறலழியச் சென்று செருச் செய்யும்] தேசமெங்கும் திரிந்து பகவத் விரோதிகளை நிரஸிக்க வேணுமென்கிற அர்த்தத்தை "எண்டிசையும் பேர்த்தகரம் நான்குடையான் பேரோதிப் பேதைகாள்! தீர்த்தகரராமின் திரிந்து" என்ற பாசுரத்தினால் வெளியிட்டவர் இவ்வாழ்வாரே. **"புற்றரவல்குல்"** என்பது இடையழகை வருணிப்பதாகும். ஸ்வாப தேசத்தில் இடையழகாவது பக்தியின் பெருமை. ஞானம் பக்தி விரக்தி என்ற மூன்றில் பக்தியானது இடைப்பட்டதாதலால் இடையழகென்பது பக்தியின் அழகேயாகும். இவ்வாழ்வார் தம்முடைய திருவந்தாதியை முடிக்குமிடத்து "என்றனளவன்றால் யானுடையவன்பு" என்றே முடித்தார். இதனால் இவரது இடையழகு நன்கு வெளிப்பட்டதாயிற்று. அன்பிலே தொடங்கி அன்பிலே தலைக் கட்டினார். **புனமயிலே!** என்ற விளியும் இவர்க்கு அழகாகப் பொருந்தும். பொழிலிடத்தே வாழும் மயில்; இவ்வாழ்வார் தோன்றிய தலமோ திருக்கடல்மல்லை; அதனைப் பாடின கலியன் "கடி பொழில் சூழ்கடன் மல்லை" என்றே பன் முறையும் பாடினர். மயில் மேகத்தைக் காண்பதிலே மிக்க குதூஹல முடைத்தாதலால், மேகம் நீர்பருக வருமிடமான கடற்கரையிலே மயில்கள் மகிழ்ந்து நிற்கும். இவ்வாழ்வார் நின்ற விடமும் கடற் கரையிலேயிறே. [சுற்றத்துத் தோழிமாரித்யாதி.] இவர்க்குப் பொய்கையாரும் பேயாரும் சுற்றத்தவர்கள்; மற்றையாழ்வார்கள் தோழிமார். [முகில் வண்ணன் பேர் பாட.] முந்துற முன்னம் முகில் வண்ணன் பேர் பாடினவர் இவ்வாழ்வாரேயாவர்; "உலகேழும் முற்றும் விழுங்கும் முகில்வண்ணன்...ஏத்துமென்னெஞ்சு" என்ற இவர் பாசுரம் காண்க புனமயில் முகில் வண்ணனைத் தானே பாடும். ... ... ... ... (11)

485. கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி*
நினைத்து முலைவழியே நின்று பால்சோர*
நனைந்தில்லஞ் சேறாக்கும் நற்செல்வன் தங்காய்!*
பனித்தலை வீழ நின் வாசற்கடை பற்றி*
சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச் செற்ற*
மனத்துக்கினியானைப் பாடவும் நீ வாய்திறவாய்*
இனித்தா னெழுந்திரா யீதென்ன பேருறக்கம்*
அனைத்தில்லத்தாரு மறிந்தேலோ ரெம்பாவாய். ... ... **12**

| | | | |
|---|---|---|---|
| இள கன்று எருமை | இளங்கன்றுகளையுடைய எருமைகளானவை | முலை வழியே நின்று பால் சோர | முலை வழியால் இடைவிடாமல் பால் பெருக, (அப் பெருக்கினால்) |
| கனைத்து | (பால் கறப்பார் இல்லாமையாலே) கதறிக்கொண்டு | இல்லம் | – வீட்டை |
| கன்றுக்கு இரங்கி | (தன்) கன்றின் மீது இரக்கமுற்று | நனைத்து | – (முழுதும்) ஈரமாக்கி |
| நினைத்து | (கன்று ஊட்டுவதாக) நினைத்து (அக்நினைவினால்) | சேறு ஆக்கும் நல் செல்வன் | சேறாகப் பண்ணுகையாகிற சிறந்த செல்வத்தை யுடையவனுடைய |

| | | |
|---|---|---|
| தங்காய் | — | தங்கையானவளே! |
| பனி | — | பனியானது |
| தலை வீழ | — | எங்கள் தலையிலே விழும்படி |
| நின் வாசல் கடை பற்றி | | உனது மாளிகையின் வாசற் கடையை அவலம்பித்துக் கொண்டு, |
| சினத்தினால் | | (பிராட்டியைப் பிரித்தான் என்னும்) சீற்றத்தினால் |
| தென் இலங்கை கோமானை | | தென் திசையிலுள்ள லங்கா புரிக்கு அரசனான இரா வணனை |
| செற்ற | — | கொன்றொழித்தவனும் |
| மனத்துக்கு இனியானை | | சிந்தனைக்கு இனியனுமான இராமபிரானை |
| பாடவும் | | (நாங்கள் பாடா நிற்கச் செய்தேயும் |

| | | |
|---|---|---|
| நீ | — | நீ |
| வாய் திறவாய் | — | வாய்திறந்து பேசுகிறாயில்லை, |
| இனித் தான் | | எங்களாற்றாமையை அறிந்து கொண்ட பின்பாகிலும் |
| எழுந்திராய் | — | எழுந்திரு; |
| ஈது என்ன பேர் உறக்கம் | | இஃது என்ன ஓயாத தூக் கம்? |
| அனைத்து இல்லத்தாரும் | | (இச்சேரியிலுள்ள) எல்லா வீட்டுக்காரர்களாலும் |
| அறிந்து | | (நாங்கள் உன் மாளிகை வாசலில் திரண்டு நிற்கிறவிது) அறியப்பட்டதாயிற்று: |

எல் ஓர் எம் பாவாய்!—.

* * *—நாட்டிலிருந்த போதோடு காட்டிலிருந்த போதோடு வாசியற பெருமானைப் பின்தொடர்ந்து நோக்கிக்கொண்டு திரியும் இளையபெருமாளைப் போன்று, கண்ண பிரானையன்றி மற்றொருவரையும் அறியாமல் என்று மொக்க அவனையே பின்றொடர்ந்து அவன் பக்கலில் மிகவும் பரிவுபூண்டிருப்பா னொருவனுடைய தங்கையாய்ச் சீர்மை பெற்றிருப்பாளொரு ஆய்ப்பெண்ணை உணர்த்தும் பாசுரம், இது.

நெடும்போதாக நின்வாசற் கடையை நாங்கள் பற்றிக்கொண்டு, *முன் பொலா விராவணன்றன் முதுமதிளிலங்கை செற்ற சீரிய சேவகத்தை எடுத்துப் பாடாநின்றாலும் நீ வாய்திறவாதே கிடந்துறங்குகின்றாய்; இங்ஙனும் ஒருறக்கங்கூடுமோ? உன்னைக் காணாதே நாங்கள் அலமந்து தளர்ந்திருக்கு மாற்றை நீ அறிந்து வைத்தும் இங்ஙனுறங்குகை உரியதன்று, இனிக்கடுக உணர்ந்து வாராய், என்கிறார்கள்.

இதில் முதலிரண்டரை அடிகளால் இவள் தமையனுடைய செல்வத்தின் சிறப்புக் கூறப்படுகின்றது. அவன் அநவரதம் கண்ணபிரானுடன் கூடித்திரிபவனாதலால் கறவைகளைக் காலந் தவறாது கறக்கப் பெறான்; அக்கறவைகள் வகுத்த காலத்திற் கறக்கப் பெறாமையாலே முலைகடுத்து ‘கன்று என்படுகிறதோ!’ என்று வாசலிலே நின்று குமுறி, தூரத்திற் கட்டப்பட்டிரா நின்றுள்ள கன்றின்மீது தனது பாவபந்தத்தைச் செலுத்தி, பாவநாப்ரகர்ஷத்தாலே, கன்று முலையில் வாய்வைத்ததாகக் கொண்டு, கைவழியாகவுமன்றி, கன்றின் வாய்வழியாகவுமன்றி முலை வழியே பால் சொரியா நிற்கும்; அந்தப் பாற்பெருக்கினால் வீடு முழுவதும் வெள்ளமானபடியா தொன்றுண்டு—அதனைச் செல்வமென்றிட்டு, இங்ஙனொத்த செல்வமுடையானுக்குத் தங்கையாகப் பிறந்தவளே! என்று அவளை விளிக்கின்றனர்.

கனைத்தல்—குமுறுதல்; இடைவீடின்றித் தானஞ் செய்தலையே தொழிலாகவுடைய உதார சிகாமணிகள் ஒரு கணப்பொழுது கொடாதொழியில் மனந்தளும்புமாறு போலவும், எம்பெருமான் அடியார் காரியங்களைச் செவ்வனே செய்யப் பெறுதொழியில் “நுணம் ப்ரவ்ருத்தமிவ மே ஓ்ருதயாந்நாபஸர்ப்பதி” என்று திருவுள்ளந் தளும்புமாறு

போலவும், பசுக்கள் கிரமமான காலத்திற் கறக்கப் பெருதொழியில் முலைக்கடுப்புற்றுக் கனைத்தல் இயல்பென்க.

**நின்று பால் சோர**—முகில் மழைபொழிய நினைத்தால் கடலிற்புக்கு நீரை முகந்து கொண்டு வந்து பின்பு பொழிய வேணும்; இக்கறவைகட்கு அவ்வருத்த மில்லை, நினைவே ஊற்றுகப் பால் சுரக்குமாதலால்; அந்நினைவு மாருமையால் திருமலையில் திரு அருவிகள் போன்று பால் மாருதே பெருகுமென்க. "பகவத் விஷயப்பொருள் கூற வேணும்" என்று ஒருவர் கேளாதொழியினும் கற்றுணர்ந்த ரஸிகர் தமது செல்லாமை யாலே தாமே பகவத் விஷயார்த்தங்களை எடுத்துரைக்குமாறு போலவும், அர்ஜுநன் கேளாதேயிருக்கக் கண்ணபிரான் கீதையில் "பூய ஏவ மஹா பாஹோ! ச்ருணு மே பரமம் வச:" என்று கூறத்தொடங்கினுற்போலவு மாயிற்றுக் கறவைகளின்படி.

மேல் நான்காவது முதல் இரண்டரை அடிகளால் இவர்கள் தாங்கள் செய்யும் படியைக் கூறுகின்றனர்; கீழ் "ஆழிமழைக்கண்ணு!" என்ற பாட்டில் பர்ஜந்ய தேவ தைக்கு அருளிப்பாடிட்டு மழைபெய்ய நியமித்தார்களாதலால், அக்கட்டளையின்படி அவன் பெய்யும் மழை தலையிலே விழுமாறு இவளது வீட்டுவாசற்கணையத்தை அவலம் பித்துக் கொண்டு நிற்குமாற்றைக் கூறும், நான்காமடி.

இராமபிரான் இராவணனேடு போர்புரியும்போது அவன் மிகவும் எளிவரவு பட்டமையைக்கண்டு இரக்கமுற்று, "நிசாசரர் கோமானே! போரில் மிகவும் வருத்த முற்ருய்; ஆதலின் இன்று இருப்பிடஞ்சென்று சிறிது தேற்றமடைந்து நாளை போர்க்கு வா, அப்போது என் வலியைக் காண்பாய்" என்று நியமநம் தந்து தானே போக விட்டருளினமை முதலிய பல குணங்களினுல் ஈடுபடுத்துந்தரமுடையனுதல்பற்றி "**மனத்துக் கினியானை**" என அடைமொழி கொடுக்கப்பட்டது. கண்ணபிரான் பெண் களைப் படுத்தும்பாடுகளை நினைத்தால் "வெற்ற வெறிதே பெற்றதாய் வேம்பேயாக வளர்த்தாளே" என்னும்படியிருத்தலால், அவன் மனத்துக்கு இனியனல்லன் போலும்.

**இனித்தானெழுந்திராய்**—எங்களுடைய ஆர்த்தியைக் கண்டு எழுந்திரா தொழி யில் ஒழி; மனத்துக்கினியானுடைய பாட்டுக்களைக் கேட்கவாகிலும் உணருதி என்றபடி.

**ஈதென்ன பேருறக்கம்**—உறக்கம் இருவகைப்படும்— லௌகிகமும் வைதிகமும். தமோ குணத்தின் பிராசுர்யத்தினுல் உறங்குகின்ற ஸம்ஸாரிகளின் உறக்கம்—லௌ கிகம். அனைத்துலகங்களினுடையவும் காவலைச் சிந்தனை செய்து கொண்டு *உறங்கு வான் போல் யோகு செய்யும் எம்பெருமானுடைய நித்திரை வைதிகம். இவ்விரு வகை யிலுஞ் சேராதே யிருப்பதொரு விலக்ஷண நித்திரையாயிராநின்றது உன் உறக்கம் என்கிருர்களென்க.

"அனைத்தில்லத்தாருமறிந்து" என்பதற்கு இரண்டு வகையாகக் கருத்துரைக்க லாம்; நீ பரஸம்ருத்தியையே பிரயோஜநமாகவுடையையாதலால், 'இப்பாடியிலுள்ள பெண்களில் ஒருத்தி தப்பாமல் அனைத்தில்லத்தாரும் உணர்ந்து வரவேண்டும்' என நினைத்துக்கிடக்கிருயாகில், அங்ஙனமே அனைத்தில்லத்தாரும் அறிந்து வந்தாயிற்று; இனி நீ உணர்ந்துவா என்கிருர்கள், என்பது ஒரு கருத்து; பாடியிலுள்ள பெண்களெல் லாருந் திரண்டு வந்து உன் மாளிகை வாசலில் நின்று கூப்பிட, நீ சிறிது பொழுது

உணராமற் கிடக்க, இதனால் உனக்கு வரும் மதிப்பை அனைவரும் அறியவேண்டுமென்று கிடக்கிறாயாகில், அங்ஙனும் அறிந்தாயிற்று; இனி உணர்ந்துவா, என்கிறார்கள் என்பது மற்றோர் கருத்து. இவ்விரண்டினுள் பின்னருரைத்த கருத்து சிறக்குமென்க.

(ஸ்வாபதேசம்) பூதத்தாழ்வார்க்கு அடுத்து முந்தினவரான பொய்கை யாழ்வாரை யுணர்த்தும் பாசுரமிது. **தங்காய்!** என்ற விளி இவர்க்கு நன்கு பொருந்தும். உலகில் தங்கையென்று ஸ்ரீ மஹா லக்ஷ்மியையும் தமக்கையென்று மூதேவியையும் வழங்குவர்கள். 'சேட்டை தம்மடியகத்து' என்ற திருமாலைப் பாசுரத்தில், தமக்கைக்கு வாசகமான **ஜ்யேஷ்டா** என்ற சொல்லால் மூதேவியைக் குறித்தமை காண்க. ஸ்ரீ மஹாலக்ஷ்மி தாமரை மலரிற் பிறந்தவள். 'வனச மலர்க் கருவதனில் வந்தமைந்தான் வாழியே' என்கிறபடியே பொய்கை யாழ்வாரும் தாமரைப் பூவில் தோன்றியவர். இந்த வொற்றுமைநயம் பற்றி **தங்காய்!** என விளிக்கத் தகுதியுடையாரிவ்வாழ்வார். "நனைத்தில்லஞ் சேறாக்கும்" என்ற விசேடணமும் இவர்க்கு வெகு நேர்த்தியாகப் பொருந்தும். ராவணவதாநந்தரம் திருவயோத்திக்கு மீண்டு எழுந்தருளா நின்ற பெருமானை நோக்கி பரத்வாஜ மஹர்ஷி "பங்க திக்தஸ்து ஜடிலோ பரதஸ் த்வாம் ப்ரதீக்ஷதே" என்றார். இங்கு பரதாழ்வான் சேறு பூசப் பெற்றிருப்பதாகச் சொல்லப்பட்டதன் கருத்து யாது? இரவும் பகலும் நிச்சலும் அழுதழுது நனைத்தில்லம் சேறாக்கினன் என்றபடி. "வண்பொன்னிப் பேராறுபோல் வருங் கண்ண நீர்கொண்டு அரங்கன் கோயில் திருமுற்றம் சேறு செய் தொண்டர்" என்றார் குலசேகரப் பெருமாளும். அவ்வண்ணமாகவே பொய்கை யாழ்வாரும் "பழுதே பல பகலும் போயினவென்று அஞ்சியழுதேன்" என்று தாமே பேசினபடியே அழுதவராதலால் நனைத்தில்லஞ் சேறாக்கினரென்க.

[கனைத்து] முதன் முதலாகப் பேசத் தொடங்கும்போது கனைப்பது இயல்பு. பொய்கையார்க்கு முன்னம் பேசினவர்கள் யாருமில்லை. இவரே முதன் முதலாகப் பேசத் தொடங்கினவரென்பது இவ்வினையெச்சத்தினால் தோற்றுவிக்கப்படும். [இளங் கற்றெருமை] எருமை யென்றால் மஹிஷீ; லக்ஷித லக்ஷணாக்ரமத்தால் தேவ தேவ திவ்ய **மஹிஷீ** என்றவாறு. எம்பெருமானுக்கு திவ்ய மஹிஷியான பிராட்டியை யொப்பவர் இவ்வாழ்வார் என்பது ஸூசனை. "இளங் கன்றுகளையுடைய" என்று விசேஷண மிட்டதனால், மற்றை யாழ்வார்களனைவரும் இவர்க்கு வத்ஸ ஸ்தாநீயர்களாய் இவர் மாத்ரு ஸ்தாநீயர் என்று காட்டினபடி. ஆழ்வார்களுள் முதல்வரிறே யிவர். [கன்றுக்கிரங்கி] இவர் ஸ்ரீ ஸூக்தி யருளிச் செய்யத் தொடங்கினது கன்றுகளான நம்போல்வார் பக்கலிலுள்ள பரம க்ருபையாலென்கை.

[நினைத்து முலைவழியே நின்று பால்சோர.] பகவத் குணங்களை நினைத்தவாறே அந்த நினைவு தானே ஊற்றாகப் பால் போன்ற ஸ்ரீ ஸூக்திகள் பெருகப்புக்கன என்றபடி. [பனித்தலைவீழ நின்வாசல் கடைபற்றி] இவர் பொய்கையில் தோன்றினவராதலால் இவரது வாசற்கடையைப் பற்றுவார்க்குப் பனித்தலை வீழ ப்ராப்தமே யாகுமிறே. [சினத்தினா லித்யாதி.] இது ஸ்ரீராம குண கீர்த்தனம். மஹர்ஷிகளின் ஞானக் கண்ணுக்கும் இலக்காகாதவொரு ஸ்ரீராம சரிதம் இவ்வாழ்வாருடைய அகக்கண்ணுக்கு இலக்கானமை "பூமேய மாதவத் தோன்தாள் பணிந்த வாளரக்கன் நீண்முடியைப்,

பாதமத்தா லெண்ணினன் பண்பு." என்ற இவரது பாசுரத்திற் பொலியும். அதில் "நாமே யறிகிற்போம் நன்னெஞ்சே!" என்றதற்குப்பொருந்த "மனத்துக் கினியானை" என்றாள். [இனித் தானெழுந்திராய்] "பழுதே பல பகலும்" என்கிற பாசுரம் பேசின பிறகுங்கூட உறங்கலாமோ? என்கை. முமுக்ஷுப்படியில் "பழுதே பல பகலும் போயின வென்று இறந்த நாளைக்குக் கூப்பிடுகிறவனுக்கு உறங்க விரகில்லை" என்ற ஸ்ரீ ஸூக்தியும் இங்கு அநுஸந்தேயம். [அனைத்தில்லத்தாரு மறிந்து] "அறியுமுலகெல்லாம் யானேயு மல்லேன்" என்ற இவ்வாழ்வாரது பாசுரத்தை அழகாக நினைப்பூட்டுகிறபடி காண்மின்.

இப்பாசுரத்தோடு ஆண்டாளுக்கு முந்தின ஆழ்வார்களை யெல்லாம் உணர்த்திற்றாயிற்று. "ஆழ்வார்கள் பன்னிருவர்" என்றுமுள்ள ஸம்ப்ரதாயப்படிக்கு ஸ்ரீ மதுரகவிகளும் ஆண்டாளும் ஆழ்வார் கோஷ்டியில் சேராதவர்களாதலால் இவ்விருவரையு முணர்த்துவதும் இப்பாட்டிலேயே அறியக்கிடக்கிறது. எங்ஙனே யென்னில்; நற்செல்வன் தங்காய்! என்றது நற்செல்வன் தங்கையே! என்று பொருள்படுதலால் நற்செல்வன் தன்னுடைய கையாக இருப்பவனே! என்றபடியாகும். இங்கு நற்செல்வனென்பது நம்மாழ்வாரை, அவர் திருவாய்மொழி அருளிச் செய்கையில் மதுரகவிகள் அவருடைய கையின் ஸ்தானீயராயிருந்து பட்டோலை கொண்டாராதலால் இந்த விளி மதுரகவிகட்குப் பொருந்தும்.

இனி நற்செல்வனென்று எம்பெருமானாரைச் சொல்லிற்றாகி அவருடைய தங்கையென்று ஆண்டாளையுஞ் சொல்லக் குறையில்லை "கோதற்ற ஞானத் திருப்பாவை பாடியபாவை தங்கை" என்றும், "பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னானாள் வாழியே" என்றுமுள்ளவை காண்க. ஆண்டாள் தன்னைத்தானே உணர்த்திக் கொள்ளுகை பொருந்துமோவென்று விரஸமாக வினவுவார்க்கு நாம் விடையிறுக்க வல்லோமல்லோம். சொற்சுவை அமைந்திருக்கு மழகை அநுபவித்துப் போருகிறோமத்தனை.

486. புள்ளின்வாய் கீண்டானைப் பொல்லா வரக்கனை*
கிள்ளிக் களைந்தானைக் கீர்த்திமை பாடிப்போய்*
பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம் புக்கார்*
வெள்ளி யெழுந்து வியாழ முறங்கிற்று*
புள்ளுஞ் சிலம்பினகாண் போதரிக் கண்ணினாய்!*
குள்ளக் குளிரக் குடைந்து நீராடாதே*
பள்ளிக்கிடத்தியோ பாவாய் நீ நன்னாளால்*
கள்ளந் தவிர்ந்து கலந்தேலோ ரெம்பாவாய். ... ... 13

| | | | |
|---|---|---|---|
| புள்ளின் வாய் கீண்டானை | பறவையுருவம் பூண்டு வந்த பகாசுரனுடைய வாயைக் கீண்டெறிந்தவனும் | கீர்த்திமை பாடி போய் | வீர சரிதங்களைப் பாடிக் கொண்டு சென்று |
| பொல்லா அரக்கனை கிள்ளி களைந்தானை | கொடியனான இராவணனை முடித்து (அரக்கர் குலத்தை வேரோடு) களைந்தொழித்தவனுமான எம்பெருமானுடைய | பிள்ளைகள் எல்லாரும் | எல்லாப் பெண்பிள்ளைகளும் |
| | | பாவைக் களம் புக்கார் | நோன்பு நோற்பதற்காகக் குறிக்கப்பட்ட இடத்திற் புகுந்தனர்; |

